[22nd September 1961

SRI M. KALYANASUNDARAM : திருச்சியிலிருந்து பங்களூருக்கு பஸ் விடும் யோசனை எந்த அளவில் இருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : இப்போது யோசனையில் இருப்பதை எல்லாம் சொல்லிவிட்டேன்.

SRI M. KALYANASUNDARAM : இது யோசனையில் இல்லையா ?

THE HON. SRI V. RAMAIAH : இதற்குத் தனியாக கேள்வி வேண்டும்.

SRI K. ANBAZHAGAN : இப்போது கூறப்பட்ட நீண்ட தூர பஸ்கள் எப்போது விடப்படும் ? அதோடு சிதம்பரத்திலிருந்து மதுரைக்குப் பஸ் விட வேண்டும் என்ற கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI V. RAMAIAH : என்னுடைய பதிலில் பி. பிரிவில் "The services will be operated as expeditiously as possible after complying with the statutory provisions in Chapter IV-A of the Motor Vehicles Act என்று சொல்லப்பட்டிருக்கிறது. அங்கத்தனிர் அவர்கள் கேட்கும் வேறு கேள்விகளுக்கு என்னிடம் இப்போது தகவல் இல்லை.

*Compost Manure*

9-00 a.m. *1708 Q.—SRI V. SUBBIAH ; கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959-60-ம் வருஷம் தயாரித்த கம்போஸ்ட் உரம் 1958-59-ம் வருஷம் தயாரித்ததைவிட அதிகமா அல்லது குறைவா ?

(இ) அதற்கான காரணங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The production of compost in 1959-60 was more than that in 1958-59.

(*b*) The increase was due to loan facilities afforded by Government to municipalities and notified panchayats and the appointment of special staff of Compost Development Inspectors in the selected blocks.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : With a view to creating more incentives to the ryots, is there any proposal before the Government to give subsidy to the ryots who take up this compost manufacture?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no proposal to add to the subsidies, aid and support that are being given to those who prepare compost.

SRI V. SUBBIAH : ஸார், இந்த ரசாயன உரத்தில் உள்ள மோகமானது இந்த விவசாயிகளை விட்டு மாற கம்போஸ்ட் உரத்தை மேலும் விளம்பரப்படுத்தி, விவசாயிகளுக்கு ஊக்கம் கொடுத்து மேலும் இந்தத் திட்டத்தை நல்ல முறையில் பயன்படுத்தப் புதிய திட்டங்களை ஏற்படுத்தியிருக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM ; அடியோடு ரசாயன உரத்தில் இருக்கும் மோகத்தை எடுத்துவிட முடியாது. அப்படி எடுத்துவிடுவதும் சரியல்ல. ஓரளவு ரசாயன் உரமும் வேண்டியதுதான். ரசாயன உரத்தையே நம்பிக்கொண்டிருக்காமல் இருப்பதற்காக கம்போஸ்ட் உர

22nd September 1961]

உற்பத்தியிலும் நடவடிக்கை எடுககப்பட்டு வருகிறது. அந்த வகையில் இந்த ஆண்டில், 642,638 டன்னுக்கும் அதிகமாக கம்போஸ்ட் உரம் உற்பத்தி செயுயப்பட்டிருக்கிறது.

*Ondikaradu kanmoi*

* 1709 Q.—SRI N. R. THIAGARAJAN ; கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலுக்கா, சித்தரபட்டி பொதுமக்கள் காற்றின் கொடுமையிலிருந்து தப்ப ஒண்டிக்கரடு அருகில் கண்மாய் வெட்ட 12-7-58-ல் ஜில்லா கலெக்டரிடம் கொடுத்தமனு என்னவாயிற்று ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The proposal was examined and dropped as not feasible. The position was also explained to the petitioners through the hon. Member by the Estate Manager, Bodinayakanur, in the third week of April 1959.

SRI N. R. THIAGARAJAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் இந்த இடத்தை நேரில் பார்வையிட்டிருக்கிறார்கள். சித்தார்பட்டி மட்டுமல்லாமல், கருப்பத்தான்பட்டி, அம்மாப்பட்டி, கல்லுப்பட்டி முதலிய இடங்களில் மணலால் மூடிவிடும் தறுவாயில் இருக்கிறது. அதற்குத் தகுந்த நடவடிக்கை எடுத்து அந்த மாதிரி மூடப்பட்டு விடாமல் காப்பாற்ற முயற்சி எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தண்ணீரைக் குளத்தில் நிரப்ப முடியவில்லை. அப்படி நிரப்பினாலும் வடிந்து விடுகின்றனது. இப்போது இருக்கும் இயற்கை நிலையில் இந்தத் திட்டத்தை எடுத்து நடத்துவது பயனுள்ளதல்ல என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

*Community Development Block (Polur)*

* 1710 Q—SRI S. M. ANNAMALAI ; கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம் போளூர் சமுதாய நலத் திட்டத்திற்கு 1960-61-ம் ஆண்டில் (1) மாட்டு வாரகக் கடனுக்காகவும், (2) பம்ப் செட் வாங்கவும் விவசாயிகளுக்கு கடன் தருவதாக ஒதுக்கிய பணம் எவ்வளவு ?

(இ) ஆறு மாதங்களுக்கு மேல் பணம் கொடுக்கப்படாமலிருக்கும் விண்ணப்பங்கள் எத்தனை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) (1) Rs. 80,000.

(2) Rs. 20,000.

(இ) Ninety-one.

SRI S. M. ANNAMALAI : ஒதுக்கிய பணம் போதவில்லை என்று பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிடமிருந்து சர்க்காருக்கு விண்ணப்பம் ஏதாவது வந்ததா ? மேலும் பணம் சாங்ஷன் செய்ய என்ன முயற்சிகளை எடுத்துக்கொண்டார்கள் ?

THE HON SRI C. SUBRAMANIAM : ஒரு லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டது. பூரா தொகையும் கொடுக்கப்பட்டுவிட்டது. இதற்குமேல் வேண்டுமென்பதற்கு தகவல் வந்தால் பரிசீலனை செய்யப்படும்.

*Radio stations—Lands assigned to*

* 1711 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

நமது ராஜ்யத்தில் ரேடியோரிசீவிங் நிலையமும், ஒலி பராப்பு நிலையமும் அமைக்க சர்க்கார் கட்டடம் அல்லது நிலம் எங்கெங்கு கொடுக்கப்பட்டிருக்கிறது ?